[23rd February 1961

SRI A. A. RASHEED : May I know whether there is a proposal to allow municipalities to run buses?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

* 420 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) புதிய பஸ் ரூட்டுகள் வழங்குவதில் மாஜி ராணுவத்தினர் கூட்டுறவு பஸ் போக்குவரத்து ஸ்தாபனங்களுக்கு எத்தகைய சலுகை காட்டப்படுகிறது?

(இ) இந்தச் சலுகைகளை இன்னும் அதிகரிக்க உத்தேசம் உண்டா?

THE HON. SRI V. RAMAIAH : (a) The Motor Vehicles Act provides that, other conditions being equal, an application for a stage carriage permit from a co-operative society shall, as far as may be, given preference over applications from individual owners. Permits for stage carriages are granted on the basis of marks awarded to the applicants. Out of a total of 3 marks, one mark is set apart for the applicant being a registered co-operative society or a registered public limited company or a registered private company. Preference is shown to the Motor Transport Co-operative Societies for Ex-Servicemen with reference to the provisions referred to above.

(b) No, Sir.

SRI S. M. ANNAMALAI : ராணுவத்தில் இருந்தவர்களுக்கு தனிச்சலுகை ஏதாவது தரப்படுகிறதா? கூட்டுறவு சங்கங்களுக்குத் தரப்படுகிற சலுகைதான் அவர்களுக்கும் தரப்படுகிறதே தவிர, ராணுவத்தில் சேவை புரிந்ததற்காக தனிச்சலுகை தரப்படவில்லை. அதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI V. RAMAIAH : ராணுவத்தில் இருந்தவர்களுக்குக் கூட்டுறவு சொஸைட்டிகள் அமைத்துக் கொடுக்கிறார்கள். அந்தக் கூட்டுறவு சொஸைட்டிகளுக்குப் பஸ் பர்மிட் வழங்குவதில் ஒரு சலுகை காட்டப்படுகிறது.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : தேச விடுதலைக்காக சுதந்திரப் போராட்டங்களில் ஈடுபட்ட தியாகிகளையும் அவர்கள் வரவுகளையும் கூட்டுறவு இயக்கத்தில் இணைத்து அவர்களுக்கு முதல் சலுகை அளித்து பஸ் பர்மிட் கொடுக்கவும், கொடுத்தாலுங்கூட, அதை அனுபவிக்க முடியாதபடி கோர்ட்டுகளில் தகராறு செய்கிறார்கள் பஸ் முதலாளிகள். அத்தகைய இன்னலைத் துடைத்து, தியாகிகளுக்குப் பாதுகாப்பு அளிக்க சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் அவர்கள் தியாகிகளுக்கு நன்மை செய்யவேண்டுமென்று கருதினால், தியாகிகளெல்லோரையும் ஒன்றாக ஒரு கூட்டுறவு சொஸைட்டி அடிப்படையில்கொண்டுவந்து, கூட்டுறவு சொஸைட்டிகளுக்குக் கிடைக்கும் சலுகைகளைப் பெறுவதற்கு முயற்சி செய்யலாம்.

SRI A. VEDARATHNAM : ஸிலோன் ரிபாட்ரியேட்ஸ் இத் தகைய பஸ் பர்மிட்டுகளுக்கு கூட்டுறவு சொஸைட்டி மூலமாக விண்ணப்பம் செய்திருந்தார்களே, அது அங்கிகரிக்கப்பட்டதா ? அத்தகையவர்களுக்கு ஏதாவது உதவி செய்ய அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : அவர்களும் கூட்டுறவு சொஸைட்டி அமைத்து முயற்சி எடுத்தால் சம்பந்தப்பட்ட ரீஜினல் ட்ரான்ஸ்போர்ட் அதாரிடி அதைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வார்கள். எங்கே, எப்பொழுது விண்ணப்பம் கொடுத்தார்கள் என்பது எனக்குத் தெரியாது.

SRI P. M. MUNUSAMI GOUNDER : நம் ராஜ்யத்தில் எத்தனை மாஜி ராணுவத்தினர் கூட்டுறவு சொஸைட்டிகள் பஸ் போக்கு வரத்து நடத்துகின்றன ? அவை எந்த நிலைமையில் நடக்கின்றன என்று தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI V. RAMAIAH : எத்தனை சொஸைட்டிகள் என்பதற்கு உடனடியாக தகவல் இல்லை. நான் தெரிந்துகொண்ட வரையில் எல்லா சொஸைட்டிகளும் நன்றாகத்தான் நடந்து கொண்டிருக்கின்றன.

*T.B. Hospitals*

* 421 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா— 9-00 a.m.

(அ) இம்மாநிலத்தில் க்ஷயரோக ஆஸ்பத்திரிகள் எங்கெங்கு இருக்கின்றன ? எத்தனை இருக்கின்றன ?

(இ) ஒவ்வொன்றிலுள்ள படுக்கைகள் எத்தனை ?

(உ) ஜில்லாதோறும் இந்த ஆஸ்பத்திரியை ஏற்படுத்த உத்தேசம் உண்டா ?

(எ) அப்படியானால், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) There are eleven Tuberculosis Hospitals in the State. The places where they are situated and the number of beds in each hospitals are furnished in the statement placed [a] on the table of the House.

(*c*) No, Sir.

(*d*) Does not arise.

SRI A. VEDARATHNAM : இப்போது இருக்கின்ற ஆஸ்பத் திரிகள் ஒவ்வொன்றிலும் படுக்கைகள் போதுமானதாக இல்லா ததனால் வெயிட்டிங் லிஸ்டில் அதிகமான பேர்கள் இருக்கிறார்கள்.

---

a Printed as Appendix II on page 388 infra.